# ஜனசக்தி

தின இதழ்

ஆசிரியர்: ப. ஜீவானந்தம்.

பக்கம் 4  விலை 1 அணா  இலங்கையில் 10 சதம் (விமானத் தபால்)

மலர் 13]  சென்னை 24-10-56, துன்முகி, ஐப்பசி—8 புதன் (வெளியூர் 25-10-56 ஐப்பசி 9—வியாழன்)  [இதழ் 69


### வெள்ள நிவாரணத்திற்கு ரஷ்ய உதவி

புதுடில்லி, அக். 24—

இந்தியாவின் வெள்ள நிவாரணத்திற்கு சோவியத் செஞ்சிலுவை சங்கங்களின் சார்பில் ஒரு லட்ச ரூபாய் நன்கொடையைச் சோவியத் ஸ்தானிகர் மென்ஷிகோவ் பிரதம மந்திரி நேருவிடம் அளித்தார்.

### இந்தியாவின் வைரங்கள்

நாகபுரி, அக். 24—

புதிய மத்தியப் பிரதேச ராஜ்யத்தில், பன்னா என்ற இடத்தில் 750 சதுர மைல் பிரதேசத்தில் உள்ள வைரச் சுரங்கங்களில் இயந்திரங்களை உபயோகப் படுத்துவதின் மூலம் தினம் 1895 காரட் எடையுள்ள வைரங்கள் உற்பத்தி செய்ய முடியும், என்று ரஷ்ய நிபுணர்கள் கூறியுள்ளனர்.

### வடக்கு எல்லைப் பிரச்சினையைத் தீர்க்க

# ராமமூர்த்தி யோசனையை சர்க்கார் ஏற்றது

## கம்யூனிஸ்டுகளின்றி நிலையான கேரள சர்க்கார் அமையாது

### மலபார் கம்யூனிஸ்ட் எம். எல். ஏ.க்களின் வழியனுப்புக் கூட்டத்தில் தலைவர்கள் உரை

சென்னை, அக். 24—

"நாங்கள் மகிழ்ச்சியுடன் பிரிந்துசெல்லுகிறோம். கேரளத்திற்குச் சென்று, அங்கு கம்யூனிஸ்ட் கட்சியும் உட்பட்ட ஒரு நிலையான மாற்று சர்க்காரை ஏற்படுத்த எல்லா முயற்சியும் செய்வோம்" என்று நேற்று மலபார் கம்யூனிஸ்ட் எம். எல் ஏ.க்களுக்குக் கொடுத்த பிரிவுபசாரத்திற்கு பதிலளிக்குமுகத்தான் தோழர் கே. பி. கோபாலன் எம்.எல்.ஏ., பலத்த மகிழ்ச்சி ஆரவாரத்திற்கிடையில் கூறினார்.

நேற்று மாலை சென்னை கோகலே ஹாலில், சென்னை ராஜ்யத்திலிருந்து பிரிந்துபோகும் மலபார் கம்யூனிஸ்ட் எம். எல். ஏ.க்களுக்கு, இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் சென்னைக் கமிட்டியின் சார்பில் ஒரு பிரிவுபசாரக் கூட்டம் நடைபெற்றது. தோழர் ப. ஜீவானந்தம், எம்.எல்.ஏ., தலைமை வகித்தார்.

மேடையின்மீது பிரிந்துபோகும் மலபார் கம்யூனிஸ்ட் எம்.எல்.ஏக்கள் தோழர்கள் கே. பி. கோபாலன், டி. வி. நாராயண நம்பியார், சி. எச். கணரன், பி. கே. கோபாலகிருஷ்ணன், மாதவன், ஆர். கிருஷ்ணன், குஞ்சன், கோபாலன் உண்ணி ஆகியோர்

(2-ம் பக்கம் பார்க்க)

### சோவியத் சட்டசபை அதிகாரம்

மாஸ்கோ, அக். 23—

சோவியத் சட்டசபையை மேலும் விரிவான ஜனநாயக ஸ்தாபனமாக்கவும் அதன் அலுவல்களை விஸ்தரிக்கவும் திட்டமிடப்பட்டு வருவதாக இத்தாலிய தூதுகோஷ்டியிடம் ரஷ்யக் கம்யூனிஸ்ட் கட்சி முதல் செயலாளர் குருஷேவ் தெரிவித்தார்.

## மந்திரியின் மாறிய குரல்

சென்னை, அக். 24—

நேற்று சட்டசபையில் வடஎல்லைப் பிரச்சினை 1 மணி நேர விவாதத்திற்கு வந்தது. எதிர்க் கட்சித் தலைவர் தோழர் ராமமூர்த்தி உடனடி இதைத் தீர்க்க மத்திய சர்க்கார் மந்திரி உடனடியாக இங்கு வந்து சென்னை ஆந்திர சர்க்கார்களின் பிரதிநிதிகளுடன் உட்கார்ந்து பேசித் தீர்க்க வேண்டும் என்று முன் வைத்த ஆலோசனையை நிதிமந்திரி ஏற்றார்.

திரு. கே. விநாயகம் எம்.எல்.ஏ. இவ் விவாதத்தைத் துவக்கி வைத்தார். சென்னை சர்க்காரின் அசிரத்தைதான் பிரச்சினை இவ்வளவு நாள் நீண்டதற்குக் காரணமென்றார். அதனால்தான் போராட வேண்டிய அவசிய மேற்பட்டது என்றார். மேலும் பேசுகையில் மாணிக்கம் என்ற ஒரு தமிழரசுக் கழகத் தொண்டர் சிறையில் அதிகாரிகளின் அசிரத்தையால் சிறையில் இறந்ததையும், சத்தியாக்கிரஹிகள் கைவிலங்கிடப்படும் அநீதி பற்றியும் குறிப்பிட்டார். எம். பழனியாண்டி, வி. பாலகிருஷ்ணன் ஆகியோரும் சென்னை சர்க்காரின் போக்கைக் கண்டித்தனர்.

எதிர்க் கட்சித் தலைவர் தோழர் ராமமூர்த்தி பேசுகையில் ஆந்திரத்தின் முதன் மந்திரியும் உதவி மந்திரியும் சமீபத்தில் பேசிய பிறகு நிலைமை மேலும் மோசமாகிறது என்றார். ஏற்கனவே அவர்கள் ஒப்புக்கொண்டதையே கைவிட்டுவிட்டதைத்தான் இது

(2-ம் பக்கம் பார்க்க)

## சுராவர்த்தி—சௌ என்-லாய் கூட்டறிக்கை

### சீனப் பிரதமர் பாகிஸ்தானுக்கு வருவார்

கராச்சி, அக். 23—

சீனா சென்றுள்ள பாகிஸ்தான் பிரதமர் சுராவர்த்தியின் வேண்டுகோளுக்கிணங்க, சீனப் பிரதமர் சௌ என்-லாய் கூடிய சீக்கிரம் பாகிஸ்தானுக்கு விஜயம் செய்ய ஒப்புக்கொண்டார்.

இரு நாட்டுப் பிரதமர்களுக்கிடையே 4 நாட்களாக நடைபெற்றுவந்த பேச்சுவார்த்தைகளின் விளைவாக இருவரும் கீழ்க்கண்ட கூட்டறிக்கை விடுத்திருக்கிறார்கள்.

"சீனாவும் பாகிஸ்தானும் உலக சமாதானத்தைப் பாதுகாப்பதற்கு, தம்மாலான சகல முயற்சிகளையும் ஈடுபடுத்த உறுதிகொண்டுள்ளன. சர்வதேசக் குமுறலைத் தணிப்பதற்கும் முழுமூச்சுடன் பாடுபடுவோம்.

"சர்வதேச கெடுபிடி நிலைமைகளைத் தணிப்பதிலும், நாடுகளிடையே நல்லுறவை ஏற்படுத்துவதிலும் பாண்டுங் மகாநாடு நற்பணி புரிந்துள்ளது என்று சீன—பாக் பிரதம மந்திரிகளாகிய நாங்கள் பெருமையுடன் சொல்லிக்கொள்ள விரும்புகிறோம். பாண்டுங் மகாநாட்டுத் தீர்மானங்களில எங்களுக்குள்ள நம்பிக்கையை மீண்டும் ஊர்ஜிதம் செய்கிறோம். ஆசிய—ஆப்பிரிக்க நாடுகளிடையே நட்புறவுமிக்க ஒத்துழைப்பை ஏற்படுத்துவதில் தொடர்ந்து பாடுபடுவோம்.

"சீனாவுக்கும் பாகிஸ்தானுக்குமிடையேயுள்ள பிரச்னைகளில் சமரசம் காணுவதற்கு சமாதானத்தை அடிப்படையாகக் கொண்டு எங்களாலான சகல சக்திகளையும் பிரயோகிப்போம் என்று கூட்டறிக்கையில் கண்டுள்ளது.

## வட ஆபிரிக்கா கொந்தளிக்கிறது!

### விமானத்தை வழிமறித்து 5 பெரும் அல்ஜீரிய தலைவர்கள் கைது

### எங்கும் ஆர்ப்பாட்டம்; ஸ்ட்ரைக்குகள்

பாரிஸ், அக். 23—

ஐந்து பெரிய அல்ஜீரிய விடுதலை இயக்கத் தலைவர்கள் எதிர்பாராதவிதமாக பிரெஞ்சுப்படைகளால் கைது செய்யப்பட்டுள்ளனர். இதனால் மொராக்கோ, டுனிஷ்யா, அல்ஜீரியா முதலிய நாடுகளில் பெரும் குமுறல் ஏற்பட்டுள்ளது.

இந்தத் தலைவர்கள் கைது செய்யப்பட்ட முறை உலக முழுவதிலுமுள்ள ஜனநாயக சக்திகளால் கடுமையாகக் கண்டிக்கத் தக்கதாக உள்ளது. இவர்கள் அல்ஜீரிய நிலைபற்றி மொராக்கோ சுல்தானோடும், டுனிஷ்யத் தலைவர்களோடும் கலந்து பேசுவதற்காக டுனிஷ்யாவின் தலைநகரான டுனிஷுக்கு விமான மூலம் சென்றுகொண்டிருந்தனர். அப்போது பிரெஞ்சு 'ஜெட்' விமானங்கள் இந்த விமானத்தை வழிமறுத்து, அல்ஜியர்ஸ் ராணுவ விமான நிலையத்தில் நிர்ப்பந்தமாக இறங்கும்படி செய்தன. விமானம் இறங்கியதும் அதில் இருந்த அல்ஜீரிய விடுதலை இயக்கத்தின் தலைசிறந்தத் தலைவர்களான பென்பெல்லா, முகமத் கிதர், மூஸ்தபா, முகமது பூதா, ஹோண் அகமத் ஆகிய ஐவரையும் பிரெஞ்சுப் படையினர் துப்பாக்கி முனையில் கைது செய்தனர்.

அல்ஜீரியத் தலைவர்கள் கைது செய்யப்பட்ட தகவல் எட்டியதும் டுனிஷ்யா, அல்ஜீரியா, மொராக்கோ முதலிய நாடுகளில் பெரும் கொந்தளிப்பு ஏற்பட்டது. டுனிஷ்ய மக்கள் 'பென்பெல்லா வாழ்க' 'பென்யூசுப் வாழ்க' என்று பிரம்மாண்டமாக ஆர்ப்பாட்டம் செய்தனர்.

கஸபிளாங்காவில் துறைமுகத் தொழிலாளர்கள், போக்குவரத்துத் தொழிலாளர்கள், கடைகாரர்கள் பல்வேறு தொழில்களைச் சேர்ந்தத் தொழிலாளர்கள் ஆயிரக்கணக்கில் வேலை நிறுத்தத்தில் ஈடுபட்டதால், நகர வாழ்க்கையே ஸ்தம்பித்துப் போயிற்று.

கிழக்கு மொராக்கோவில் எல்லாக் கடைகளும் தொழிற் சாலைகளும் மூடப்பட்டன.

## ரஷ்யாவையும் போலந்தையும் பிரிக்கமுடியாது

### புரளி கிளப்பும் ஏடுகளுக்கு வார்சா ரேடியோவின் எச்சரிக்கை

லண்டன், அக். 23—

போலந்தில் ஏற்பட்டுள்ள மாறுதல்களை தங்களது சுயநலத்துக்குப் பயன்படுத்திக் கொள்ள சில மேலைநாட்டுப் பத்திரிகைகள் எத்தனிப்பதை இன்று வார்சா ரேடியோ வன்மையாகக் கண்டித்தது.

"பொருளாதார, நிதி வகைகளில் போலந்துக்கு உதவுவதாக ஆசை காட்டி, ரஷ்யா முதலிய சோஷலிஸ்ட் நாடுகளிலிருந்து அதைப் பிரித்துவிடலாம் என்று இந்தப் பத்திரிகைகள் கனவு காண்கின்றன. இந்தக் கனவு பலிக்கப் போவதில்லை. போலிஷ் மக்கள் சோஷலிஸ சமுதாய லட்சியத்தை ஒருபோதும் கைவிடமாட்டார்கள்" என்று வார்சா ரேடியோ கூறிற்று.

குருசேவும் மற்ற ரஷ்யத் தலைவர்களும் சென்ற வாரம் போலந்துக்கு வருகை தந்து நடத்தியப் பேச்சுவார்த்தைகளைத்தொடர்ந்து நடத்துவதற்காக போலந்து கம்யூனிஸ்ட் கட்சி அரசியல் குழுவின் (பொலிட்பிரோ) தூதுகோஷ்டி ஒன்று சீக்கிரமே மாஸ்கோ செல்லும். இந்தத் தூதுகோஷ்டியில் புதிய செயலாளர் கோமுல்காவும் இருப்பார்.



மலபார் கம்யூனிஸ்ட் எம். எல். ஏ.க்களுக்கு சென்னையில் வழியனுப்புக் கூட்டம் —போட்டோ: ஜெ. எம். கே

# ஜனசக்தி

தினஇதழ்

ஆசிரியர்: ப. ஜீவானந்தம்.

ஆசிரியர் குழு :

எம். ஆர். வெங்கட்ராமன், பி. ராமமூர்த்தி, எஸ். ராமகிருஷ்ணன்,

கே. முத்தையா நிர்வாகஆசிரியர்.

புதன் 24—10—56


## இறுதிவரை உறுதி வேண்டும்!

வட எல்லையை பற்றி நேற்று சென்னை அசெம்பிளியில் நிதி மந்திரி சுப்ரமண்யம் எதிர்க்கட்சித் தலைவர் ராமமூர்த்தியின் ஆலோசனையை ஏற்று வெளியிட்ட கருத்துக்கள் தமிழ் மக்கள் அனைவரின் ஏகோபித்த கோரிக்கையாகும்.

இவ்வளவு காலங் கடந்தாவது இந்த அளவு உறுதியுடன் சென்னை சர்க்காரின் பிரதிநிதி பேச வந்ததை வரவேற்கிறோம். இதே போக்கில் ஆரம்பத்திலேயே சென்னைசர்க்கார் நடந்து கொண்டிருந்தால் இப் பிரச்னை வெகுநாளைக்கு முன்பே தீர்ந்து போய் இருக்கும்.

தெற்கு இராஜ்யங்களுக்காக ஏற்பட இருக்கும் மண்டலக் கவுன்சில் சென்னை — ஆந்திர எல்லைத் தகறுரைத் தீர்க்கட்டும் என்று மத்திய சர்க்கார் மந்திரி பந்த் கடிதம் எழுதினர். இது பிரச்னையைத் தீர்க்க சரியான மார்க்கமில்லை. ஏனென்ருல் ஆந்திராவின் இன்றைய முதல் மந்திரியும் வருங்கால முதல் மந்திரியும் திட்டவட்டமாகத் தங்களது கொள்கையை அறிவித்துவிட்டார்கள். ஆந்திரத் தமிழக எல்லைகளை ஏனைய ராஜ்யங்களுக்கிடையே உள்ள எல்லைத் தகராறுகளைத் தீர்க்கும்போது தீர்த்துக்கொள்ளலாம் என்று கூறிவிட்டார்கள். அவர்கள் ஏற்கனவேயே ஒப்புக்கொண்டதிலிருந்து பின்வாங்கி விட்டார்கள்.

எனவே மண்டலக் கவுன்ஸிலுக்கு இப்பிரச்சினையை விட்டால் அங்கும் இதே நிலைமை தான் ஏற்படும். இதனுல் வீண் காலதாமதமாவதுடன், ஆந்திர மந்திரிகளின் அடத்தால் இரு மக்களிடையேயும் கொந்தளிப்பும் சச்சரவுகளும்தான் வளரும் இதற்கு இடந்தராது உடனடியாக இப்பிரச்சனையைத் தீர்க்க மத்திய சர்க்காரின் சார்பில் ஒரு மந்திரி இங்கு வந்து இரு ராஜ்ய சர்க்காரின் பிரதிநிதிகளுடன் உட்கார்ந்து பேசித்தீர்க்கவேண்டும் என்று எதிர்க்கட்சித் தலைவர் தோழர் ராமமூர்த்தி கூறினர்.

இந்த ஆலோசனையை சென்னை சர்க்கார் ஏற்றுக்கொண்டதை நாம் முதலில் போற்றவேண்டும். சர்க்காரின் சென்ற காலப்போக்கு மாறியுள்ளதையே இது காட்டுகிறது. இத்துடன் எல்லை நியாயத்திற்காகப் போராடிய தமிழரசுக் கழகத்தினர்மீது பார்வைமாறியதையும் வரவேற்கிறோம். அவர்களை இதுவரைக் கிண்டலும் கேலியும் செய்த சுப்ரமண்யம் அவர்களது நல்லெண்ணத்தை சந்தேகிக்கவில்லை என்று அறிவித்ததையும் வரவேற்கிறோம்.

வட எல்லை சத்தியாக்கிரஹிகளிடம் இதே ரீதியில் ஆரம்பத்தில் பேசி இருந்தால், இதே உறுதியை ஆரம்பத்திலிருந்து காட்ட முன்வந்திருந்தால் இன்று நிலைமை வேருக இருந்திருக்கும். எல்லையோரங்களிலுள்ள மக்களிடம் நம்பிக்கை ஏற்பட்டிருக்கும்.

எனவே இதுவரை கைது செய்யப்பட்ட சத்தியாக்கிரஹிகளை உடனடியாக விடுதலை செய்து சென்னை சர்க்கார் நேற்று சட்டசபையில் அறிவித்ததுபோல் உறுதியுடன், உடனடியாக இப்பிரச்சினைக்குத் தீர்வு காண முன்வரவேண்டும்.

## கம்யூனிஸ்டுகளின்றி....

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

அமர்ந்திருந்தனர். அவர்களனைவருக்கும் சென்னைக் கம்யூனிஸ்ட் கட்சி, மதரூஸ் ஹார்பர் தொழிலாளர் சங்கம், பிரஸ் லேபர் யூனியன், ஹோட்டல் தொழிலாளர் சங்கம், கார்பொரேஷன் தொழிலாளர் சங்கம் ஆகிய பலஸ்தாபனங்களின் சார்பில் மாலைகள் போடப்பட்டன. அவர்கள் அனைவரும் கூட்டத்தினருக்கு அறிமுகம் செய்து வைக்கப்பட்டனர்.

### ஜீவா தலைமையுரை

கூட்டத்திற்குத் தலைமை வகித்த தோழர் ஜீவா பேசுகையில்: "தமிழ்நாட்டு கம்யூனிஸ்ட் எம். எல். ஏ.க்களும் மலபார் கம்யூனிஸ்ட் எம். எல். ஏ.க்களும் கடந்த 4½ வருடங்களாக சட்டசபையில் ஒன்ருக இருந்து வந்துள்ளோம். எல்லா பிரச்னைகளிலும் ஒன்ருக மக்களின் உரிமைகளுக்காகப் போராடி வந்துள்ளோம். வேறு எந்தக் கட்சியிலும் இம்மாதிரி இல்லை. மொழிவழியில் ராஜ்யங்கள் பிரிவதனுல் அவர்கள் நம்மை விட்டுப் பிரிந்து போவதை நினைக்கும் போது மனதிற்குக் கொஞ்சம் வருத்தம் ஏற்படுகிறது. ஆனல் நாம் விரும்பியபடி மொழிவழியில் ராஜ்யங்கள் பிரிக்கப்பட்டு, அவர்கள் ஐக்ய கேரளத்திற்குச் செல்லுவது உண்மையில் நாம் மிகவும் ஆனந்தப்படக் கூடிய விஷயமே. மகிழ்ச்சியுடன், அன்புடன் அவர்களுக்கு வழி அனுப்புகிறோம்.

ஆனல் அதே சமயத்தில் நவம்பர் 1ந் தேதிக்கு மேல் இந்தத் தோழர்கள் கேரளத்தில் எம். எல். ஏக்களாக இருக்க முடியாது. பதவி இழக்கிருர்கள். காரணம் அங்கு ஜனதிபதி ஆட்சி (ஆலோசகர்) ஆட்சி அமுலிலிருக்கிறது. இதுதான் நேரு சர்க்காரின் ஜனநாயகமா ?" என்று தோழர் ஜீவா கேட்டதும் சபையோர் வெட்கம், வெட்கம், என்று ஆர்ப்பரித்தனர்.

"கேரளத்தில் புதிய, இடைக்கால சட்டசபை வேண்டும். அல்லது இந்த எம். எல். ஏக்களைக் கலந்துதான் அங்குள்ள ஆலோசகர், ஆட்சி நடத்த வேண்டும்", என்று ஜீவா மேலும் கூறினர்.

இறுதியாக தமிழ்நாட்டிலுள்ள கம்யூனிஸ்டுகள் மட்டுமன்றி ஜனநாயக உள்ளம் படைத்த தமிழ் மக்கள் அனைவரும் கேரளாவில் ஒரு ஜனநாயக மாற்று சர்க்காரை ஏற்படுத்தும் போராட்டத்திற்கு முழு ஆதரவு அளிப்போம் என்று, சபையோரின் பலத்த கரகோஷத்திற்கிடையே கூறினர்.

### கல்யாணசுந்தரம்

அடுத்துத் தோழர் கல்யாண சுந்தரம் (எம். எல். ஏ) பேசுகையில்,

"கம்யூனிஸ்டுகளை மட்டும் ஒதுக்கிவிட்டு திரு-கொச்சியில் மந்திரிசபை அமைக்க இதுவரை காங்கிரஸ் செய்த சூழ்ச்சிகளெல்லாம் தோல்வியடைந்து, அங்கு நிலையான சர்க்காரே ஏற்பட முடியாமல் போய்விட்டது. கம்யூனிஸ்ட் கட்சியைப் புறக்கணித்து விட்டு கேரளாவில் நிலையான சர்க்கார் அமைக்கவே முடியாது. ஆகவே கேரளத்தில் கம்யூனிஸ்ட்டுகள் உட்பட்ட ஒரு மாற்று சர்க்கார் அமைக்க, இத்தோழர்களுக்கு நாம் வாழ்த்துக்கூறி அனுப்புவோம்" என்ருர்.

"ஒரே காங்கிரஸ் கட்சிக்குள்ளேயே ஆந்திரா-தமிழ், தமிழ்-மலபார் போன்ற சண்டைகள் இந்தியாவில் எங்கும் ஏற்படுகின்றன. ஆனல் கம்யூனிஸ்ட் கட்சியில் மாத்திரம்தான் இத்தகைய சண்டைகள் கிடையாது. எந்த தேசிய இனத்தவர்களாயினும் கம்யூனிஸ்டுகள் மக்களுக்கு சேவை செய்வதையே கொள்கையாகக் கொண்டுள்ளார்கள். காங்கிரஸ்காரர்களைப் போல் சுய நலத்தையல்ல" என்று மேலும் கூறினர்.

தோழர் கே. முருகேசன் இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் சென்னை ஜில்லாக் கமிட்டியின் சார்பில் மலபார் எம்.எல்.ஏ.க்களுக்கு வாழ்த்துக் கூறினர்.

தமிழ்நாடு தொழிற்சங்கக் காங்கிரஸ் உபதலைவர் தோழர் எஸ். கிருஷ்ணமூர்த்தி பேசுகையில் தொழிற்சங்க இயக்கத்தில் எவ்வாறு தமிழ்நாடு, மலபார் தோழர்கள் ஒன்றுபட்டு வேலைசெய்து தொழிற் சங்க ஒற்றுமையைக் கட்டியிருக்கிறேம் என்ருர்.

### ராமமூர்த்தி

அடுத்து, தோழர் பி. ராமமூர்த்தி (சட்டசபை எதிர்க்கட்சித் தலைவர்) பேசுகையில், நவம்பர் 1 நாம் அனைவரும் பெருமையடைய வேண்டிய நந்நாள் என்றும், மக்களின் கிளர்ச்சியால் எவ்வாறு ஆளும் வர்க்கங்கள் இறுதியாக மொழிவழியில் ராஜ்யங்களைப் பிரிக்க இணங்கவேண்டி ஏற்பட்டதென்றும், இது ஜனநாயக இயக்கத்தின் மகத்தான வெற்றி என்றும் குறிப்பிட்டார். தமிழ் நாட்டின் வட எல்லைப் பிரச்னையைத் தீர்ப்பதற்குக் கம்யூனிஸ்ட் கட்சி கூறிய யோசனையைக் கடைசியில் சென்னை சர்க்கார் ஏற்றுக் கொண்டிருப்பதையும் குறிப்பிட்டார். மொழிவழிப் பிரிவினைக்கு நிற்கும் அதே சமசமயத்தில் கம்யூனிஸ்ட் கட்சி நாட்டின் உண்மையான ஒற்றுமைக்காக நிற்பதையும் தொழிலாளிவர்க்கத்தின் பரந்த சர்வதேசியத்தைப் பற்றியும் குறிப்பிட்டார்.

### உபசாரத்திற்கு நன்றி

பிறகு தோழர் கே. பி. கோபாலன், (எம். எல். ஏ.) மலபார் எம். எல். ஏ.க்களுக்கு இவ்வளவு அன்புடனும், மனப்பூர்வமாகவும் நடத்தப்பட்ட பிரிவுபசாரத்திற்காக தங்கள் அனைவரின் சார்பிலும் தமிழ்நாட்டுக் கம்யூனிஸ்ட் கட்சிக்கும், தமிழ் நாட்டு மக்களுக்கும் தன் நன்றியையும், வந்தனத்தையும் தெரிவித்துக் கொண்டார்.

சென்னை சட்டசபையில் மிகவும் நெருங்கிய நட்புறவான முறையில் எவ்வாறு தமிழ் கம்யூனிஸ்ட் எம். எல். ஏக்களும். மலபார் கம்யூனிஸ்ட் எம். எல். ஏ.க்களும் எவ்வித வித்தியாசமுமின்றி ஒரே கோஷ்டியாக ('டீம்') வேலை செய்து வந்ததைக் குறிப்பிட்டார்.

அடுத்துத் தோழர் டி. வி. நாராயண நம்பியார் பேசுகையில் கணவன் வீட்டுக்குப் போகும்போது மணப்பெண்ணுக்குத் தாய் வீட்டிலிருந்து பிரிந்து செல்கிறேமே என்று விசனம் ஏற்படுகிறது. ஆனல் அதேசமயத்தில் தன் எதிர்கால சுபிட்ச வாழ்வு கணவன் வீட்டில்தான் என்று அகமகிழ்ந்து, பூரிப்புடன் செல்லுகிருள். அது போல்தான் எங்கள் நிலையும் என்ருர்.

நவம்பர் 1ந் தேதியிலிருந்து தங்களுக்குப் பதவி போகிறதே என்றே, ரூ. 150 சம்பளம் கிடைக்காதே என்றே தாங்கள் கவலைப்படவில்லையென்றும், வெளியிலிருந்தும் தொடர்ந்து எப்போதும் போல் மக்களுக்காகப் போராடி வருவோம், என்றும் குறிப்பிட்டார்.

பிறகு தோழர் சி. எச். கனரன் பேசிய பிறகு, தோழர் ஜீவா நன்றிகூறக் கூட்டம்இனிது முடிந்தது.

தோழர்கள் எம். ஆர். வெங்கட்ராமன், ஏ. எஸ். கே. அய்யங்கார், வி. ஜி. ராவ்(பார்-அட்-லா), முகவை ராஜமாணிக்கம், தமிழ்நாட்டு எம். எல். ஏ.க்கள் மணலி கந்தசாமி, பாப்பான்குளம் சொக்கலிங்கம் பிள்ளை, கே. டி. ராஜூ, மதனகோபால், கே.வி. ராமசாமி, எஸ். ராமலிங்கம், எஸ். வடிவேலு, ஏ. கே. சுப்பையா, பி. வெங்கடேசன், டி. எஸ். அர்த்தநாரி ஆகியோரும் இந்த பிரிவுபசாரக் கூட்டத்தில் கலந்து கொண்டனர்.

---

## கல்யாணசுந்தரம் மந்திரியுடன் பேட்டி

சென்னை, அக். 24—

திருச்சி, சேலம் முதலிய ஊர்களிலுள்ள முனிசிபல் தொழிலாளர்களுக்கு தீபாவளி அட்வான்ஸ் தொகை இம்மாதம் 30-ந் தேதிக்குள் கொடுபட வேண்டுமென்று தோழர் எம். கல்யாணசுந்தரம் எம். எல். ஏ. இன்று ஸ்தல ஸ்தாபன மந்திரி கனம் ராமசாமி படையாச்சியைக் கண்டு விண்ணப்பித்துக் கொண்டார்.

## [illegible] யுகோ கம்யூனிஸ்ட் கட்சிகள்

### நல்லுறவு மீண்டது

பெல்கிரேட், அக். 22—

1948 முதல் துண்டிக்கப்பட்டிருந்த நல்லுறவை மீண்டும் ஏற்படுத்திக்கொள்வதென்று ஹங்கேரிய யுகோ கம்யூனிஸ்ட் கட்சிகள் இன்று முடிவுக்கு வந்துள்ளன. டிட்டோவின் ஜாகையில் ஹங்கேரிய கம்யூனிஸ்ட் தலைவர்களுக்கும் யுகோ கம்யூனிஸ்ட் தலைவர்களுக்குமிடையே கடந்த சில தினங்களாக நடைபெற்று வந்த பேச்சுவார்த்தைகளின் விளைவாகவே இந்த உடன்பாடுகள் ஏற்பட்டுள்ளன.

## டூனிஸ் பிரதமரின் கடும் ஆட்சேபம்

டூனிஸ், அக். 23—

டூனிஷ் பிரதமர் ஹபீட்பூர்கிபா இன்று பிரெஞ்சு ஸ்தானிகரை அவசரமாக அழைத்து அல்ஜீரியத் தலைவர்கள் கைது செய்யப்பட்டதற்குக் கடுமையாக ஆட்சேபம் தெரிவித்தார். அதோடு பிற நாட்டு ஸ்தானிகர்களையும் அழைத்து பிரெஞ்சு சர்க்காரின் செய்கையால் ஏற்பட்டுள்ள நெருக்கடி நிலையை எடுத்துக் கூறினர். பிரான்ஸின் முறையற்ற நடவடிக்கையை ஆட்சேபிக்கும் வகையில் பாரிஸிலுள்ள தனது ஸ்தானிகரை வாபஸ் பெற்றுக் கொள்வதென்று டூனிஷ்யா முடிவு செய்துள்ளது. அல்ஜீரியத் தலைவர்கள் கைது செய்யப்பட்ட சம்பவம் கிட்டத்தட்ட யுத்தத்தில் கொண்டுபோய் விடும்படியான நிலையை உண்டுபண்ணிவிட்டது என்று டூனிஷ்ய அதிகாரி ஒருவர் கூறினர்.

## வடக்கு எல்லை...

(முதற் பக்கத் தொடர்ச்சி)

குறிக்கிறது என்ருர்

பண்டித பந்த் இப்பிரச்சினையை வரப்போகும் மண்டலக் கவுன்சிலின் தீர்வுக்கு விடலாம் என்று சென்னை சர்க்காருக்குக் கடிதம் எழுதி இருப்பதாகத் தெரிகிறது. ஆந்திர மந்திரிகளின் இன்றைய போக்கு மண்டலக் கவுன்சிலுக்கு விடுவதில் எவ்விதப் பிரயோஜனமும் இல்லை என்பதையே காட்டுகிறது என்ருர்.

எனவே இப்பிரச்சினை மேலும் ஒத்திப்போடாமல் உடனடியாகத் தீர்ப்பது மிகமிக அவசியம். சென்னை சர்க்காரும் ஆந்திர சர்க்காரும் மத்திய சர்க்காருக்குக் கட்டுப்பட்ட ஆட்சிகள். சம்பந்தப்பட்ட ஆட்சிகள், சம்பந்தப்பட்ட இரு சர்க்கார்களின் பிரதிநிதிகளுடன் மத்திய சர்க்கார் மந்திரி ஒருவர் உட்கார்ந்து பேசித்தீர்க்க வேண்டும். தீர்க்கமுடியும். இது வல்லாது எல்லா எல்லைப் பிரச்னைகளையும் தீர்க்கும்போது இதையும் தீர்த்துக்கொள்ளலாம் என்பது ஏமாற்றுப் பேசும் பேச்சு என்ருர்,

நிதி மந்திரி சுப்ரமண்யம் பேசுகையில் ஆந்திர தமிழக எல்லைப் பிரச்சினை ஒரே ராஜ்யம் மொழியின் அடிப்படையில் இரண்டாகப் பிரிந்ததால் ஏற்பட்ட மிச்ச சொச்சமாகும்; இதை ஏனைய பிரச்னைகளுடன் சேர்ப்பது தவறு, ஏனென்ருல் ஏனைய ராஜ்யங்களின் எல்லைகள் மொழியின் அடிப்படையில்மட்டுமல்ல, பல கோட்பாடுகளை அடிப்படையாகக் கொண்டு பிரிக்கப்பட்டவை; அவைகளை இதனுடன் சேர்ப்பது சரியல்ல என்ருர்.

மண்டலக் கவுன்சிலுக்கு விடுவதால் எவ்விதப் பயனுமில்லை, என்றும் எதிர்க்கட்சித் தலைவர் கூறிய ஆலோசனைதான் சரியானது என்றும், அதனடிப்படையில் சென்னை சர்க்கார் உடனடியாக இப் பிரச்சனையைத் தீர்க்க முயலும் என்றும் கூறினர்.

தமிழரசுக் கழக இயக்கத்தைப் பற்றிக் குறிப்பிடுகையில், அவர்களது நல்லெண்ணத்தில் தனக்குச் சந்தேகமில்லை என்றும் சத்தியாக்ரஹிகளுக்கு விளம்பகம் கூறியதுபோல் ஏதாவது அநீதி ஏற்பட்டிருந்தால் அதைத்தான் விசாரிக்கப் போவதாகவும், இன்று சென்னை சர்க்கார் இப்பிரச்சனையை உடனடியாகத் தீர்க்கப்பட வேண்டிய பிரச்சனையாகக் கருதுவதால் தமிழரசுக் கழகத்தார் தொடர்ந்து இயக்கத்தை நடத்தாமல் நிறுத்திக்கொள்ளுமாறு தான் வேண்டிக்கொள்வதாயும் பேசி முடித்தார்.

## அலையோசை

விசாகப்பட்டணத்தில் வைத்து மறந்துபோன ஆட்சியின் மூக்குக் கண்ணுடி விமானமூலம் அனுப்பி வைக்கப்பட்டது. —செய்தி

இந்த முன்னுள் சைமன் கமிஷன் 'சோஷலிஸ்ட்' கண்ணுடியைப் போட்டுக்கொண்டு பார்த்தவை எவை? என்பதை 'தேசிய' ஏடுகள் எடுத்துச் சொல்லுமா என்று கேட்கிருர் ஒரு காமன் வெல்த் எதிர்ப்பாளர்.

* * *

தஞ்சை ஜில்லாவில் நெல் விலை குறையாத காரணம்.

—தினமணி தலைப்பு.

குறுவை அறுவடையானுல் என்ன? குதிர் நிறைந்தால் என்ன? பதுக்கலே எங்கள் பரமானந்த லட்சியம் என்று சமூக விரோதிகளும் அதற்குப் பச்சைக் கொடி காட்ட சர்க்காரும் இருக்க காரணம் தேடிவர அப்பறியும் சிங்கம் எதற்கு என்கிருன் நியாய விலைக் கடைக்கு நிரந்தரமாகக் கிளர்ச்சி செய்துவரும் கடுத்தர வர்க்க சிப்பந்தி.

* * *

நிஜாமுக்கு நேரு உறுதி.

—ஹைதராபாத் செய்தி.

அப்படியானுல் நித்யகண்டம் பூர்ண ஆயுசுகளுக்கு யார் உறுதி? ஆவடி சோஷலிஸமா? அமிர்தசரஸ் 'பெரிய ராஜ்யமா'? எது? என்று கேட்கிருன். ஒரு அப்பாவி அரைப் பட்டினி.

* * *

தனியார் முயற்சிக்கு கட்டுப்பாடு அவசியம்.

—கல்கத்தாவில் நேருஜி.

கேளுங்கள்! கேளுங்கள்! கட்டுப்பாடு வேண்டாத காங்கிரஸ்காரர்களே, காதைத் தீட்டிக் கொண்டு கேளுங்கள்! என்று தமுக்கடிக்கிருன் ஒரு கொள்ளைலாப வைரி.

* * *

யுவர்களுக்குக் காமராஜ் புத்திமதி.

—சென்னைச் செய்தி.

முதலமைச்சர் அவர்களே! புத்திமதிக்கு வணக்கம். மாட்டுப்பெட்டிக்கு ஓட்டுப்போடுவதில் ஒரு தடவைக்கு ஒன்பது தடவை சிந்தித்தே முடிவுகட்டுவோம், சந்தேகம் வேண்டாம் என்கிருன் ஒரு தீவிர இளைஞர் காங்கிரஸ்.

* * *

நிஜலிங்கப்பா மைசூரின் புதிய தலைவர். —சென்னைச் செய்தி

சம்யுக்த கன்னட கோஷத்தின் குறிப்பிடத்தக்க வெற்றி என்று குதியாட்டம் போடுகிருன் ஒரு மொழிவழி ராஜ்யவாதி.

* * *

அரசாங்கம் கடவுளல்ல! தவறு செய்வது சகஜம்!

—காமராஜர் சென்னைப் பேச்சு.

தேர்தல் நெருங்க நெருங்க இனி ஞானோதயம்தான், போங்க, என்கிருன் தேரோடு மாலைத் தெருவோடு திரிகிற ஒரு மாஜி டிராம்வே தொழிலாளி.

## புதிய தமிழக விசேஷ மலர்

அன்பர்களே,

நவம்பர் 1-ந் தேதி—புதிய தமிழகம் தோன்றும் நன்னு என்று "ஜனசக்தி" 16 பக்கங்களுடன் விசேஷ மலராக வெளிவரப் போவதை ஏற்கனவே அறிவீர்கள். விலை 0-3-0தான்- உங்கள் அதிகத் தேவைகளை அக்டோபர் 27.ந் தேதிக்குள் முன் பணத்துடன் நமக்குத் தெரிவியுங்கள்.

விசேஷ மலருக்கு ஏஜெண்டுத் தோழர்கள் ஆங்காங்கு விளம்பரங்கள் சேகரித்து 27-ந் தேதிக்குள் அனுப்பும்படியும் கேட்டுக் கொள்ளுகிறேம். விளம்பர விகிதங்களை பிறிதோரிடத்தில் பிரசுரித்திருக்கிறேம்.

ஜனசக்தி ஏஜெண்டுகள் சேகரித்த அனுப்பும் விளம்பரங்களுக்கு 10% கமிஷன் கொடுக்கப்படும்.

நிர்வாகி, ஜனசக்தி.

சட்டசபையில் கேள்வி நேரம்

# சிமிட்டி விற்பனையில் ஊழல்!

சென்னை, அக். 24—

நேற்று காலை சென்னை சட்டசபைக் கூட்டம் மீண்டும், ஆரம்பமாகியது. நேற்றைபக் கூட்டத்தில் கேள்வி நேரத்தின்போது கம்யூனிஸ்ட் அங்கத்தினர்கள் என். கே. பழனிசாமி, எம். கல்யாணசுந்தரம் ஆகியோர் நாட்டில் சிமிண்ட் பற்றுக்குறை ஏற்பட்டிருப்பதும், சிமெண்ட் விற்பனையில் கள்ளமார்க்கெட்டும், பாரபட்சமும் நடப்பதும் சர்க்காருக்குத் தெரியுமா என்றும், அதைத் தடுத்து, தேவைப்படுபவர்களுக்கு சுலபமாக சிமெண்ட் கிடைக்க சர்க்கார் என்ன நடவடிக்கைகள் எடுத்துள்ளனர், என்றும் கேட்டனர்.

கேள்விகளுக்கு மராமத்து மந்திரி திரு. சேதுபதி பதிலளிக்கையில், சிமெண்ட் வினியோக முறையை மத்திய சர்க்கார் நிர்ணயித்துள்ளது. சிமெண்ட் வேண்டுவோருக்கு பர்மிட்டுகள் கொடுக்கப்படுகின்றன. தாசில்தார் சொல்படி 50 சதவிகிதம், கௌரவ கண்ட்ரோலர்கள் (சிமிண்ட் முதலாளிகள்) இஷ்டப்படி 25%ம், வியாபாரிகள் இஷ்டப்படி 25%ம் சிமிண்ட் வினியோகிக்கப்படுகிறது. பர்மிட் வைத்திருப்போர் சிமிண்ட் வாங்கலாம். இதில் கள்ள மார்க்கெட் ஏற்பட வழியில்லை" என்றார்.

**தோழர் கல்யாணசுந்தரம்:** முதலாளிகளையே கண்ட்ரோலர்களாகப் போட்டால் ஏன் கள்ள மார்க்கெட் நடக்காது, என்று கேட்டார். மேலும், சென்னை சர்க்காரின் தொழில் டைரக்டரின் (டைரக்டர் ஆப் இன்டஸ்ட்ரீஸ்) கீழ் நேரடியாக சிமிட்டி வினியோகம் கொண்டுவரப்பட வேண்டுமென்றும் கோரினார்.

**சேதுபதி:** "தற்பொழுது சிமிட்டி விற்பனையில் கள்ளமார்க்கெட் நடக்கிறது என்பதை நிரூபிக்க முடியுமானால் இதுபற்றி மத்திய சர்க்காருக்கு எழுதலாம் என்றார்.

**வெங்கடேச தோசகர்:** தாசில்தார்களே சரியாக வினியோகிப்பதில்லை; இதுபற்றி பரிசிலனை செய்ய கமிட்டி வேண்டும்.

**மந்திரி:** சர்க்கார் அதிகாரிகளின் மீது குற்றம்கூறுவது சரியல்ல. எனினும் இதுபற்றிப் பரிசிலனை செய்கிறோம், என்றார்.

## என். ஜி. ஓ. ஆதரவாளர் கமிட்டி வேண்டுகோள்

முத்துப்பேட்டை, அக். 22—

"நமது மாகிலத்திலுள்ள நகரங்கள், கிராமங்களிலுள்ள பெரியோர்கள் (பொதுமக்கள் சார்பில் என். ஜி. ஓ. ஆதரவாளர்கள்) ஆங்காங்கு கட்சி சார்பற்றக் கமிட்டிகள் அமைத்து விபரம் எழுத வேண்டுகிறேன். பின்னர் மாநில மாநாடு கூட்டி என். ஜி. ஓ. சகோதரர்களுக்குத் தக்க நிவாரணம் கிடைக்க நடவடிக்கை எடுக்கத் தேவைப்படுகிறது. இதுபற்றி உடன் எழுதக் கேட்டுக் கொள்ளுகிறேன்", என்று சென்னை மாநில என். ஜி. ஓ. ஆதரவாளர் கமிட்டி செயலாளர் திரு. டாக்டர் டி.என். சிவசங்கரன் (முத்துப்பேட்டை—தஞ்சை ஜில்லா) அறிவிக்கிறார்.

## தீபாவளி அட்வான்ஸ்கோரி 4000 தொழிலாளர் ஆர்ப்பாட்டம்

மதுரை, அக். 22—

மதுரை ஹார்வி மில் தொழிலாளர்கள் 3500 பேர் அக்டோபர் 19ந் தேதி மாலை 4 மணிக்கு மில் தலைமை ஆபீஸ் முன்பு, தீபாவளிக்கு அட்வான்ஸ் தொகை கோரி ஆர்ப்பாட்டம் நடத்தினர்.

மதுரை பாண்டியன் மில்லிலும் அன்று மாலை 3-45 மணிக்கு, வேலை முடிந்தவுடன் ஆண்களும், பெண்களுமாக சுமார் 500 பேர் தீபாவளி அட்வான்ஸ் கோரி ஆர்ப்பாட்டம் செய்தனர்.

இது சம்பந்தமாக மில் நிர்வாகக்களின் பிரதிநிதிகளுக்கும் தொழிற்சங்கங்களின் பிரதிநிதிகளுக்குமிடையே நடைபெற்ற பேச்சுவார்த்தைகள் பலனளிக்கவில்லை. அட்வான்ஸ் கொடுக்கமில் நிர்வாகங்கள் மறுத்துவிட்டன. தொழிலாளர்களிடையே ஆத்திரமும், அதிருப்தியும் ஏற்பட்டுள்ளன. (ந. கி.)

# பட்டாசு தொழிற்சாலையில் கோர வெடி விபத்து

## முதலாளியின் லாபப் பேராசைக்கு 6 இளைஞர்கள் பலி

சிவகாசி, அக். 22—

சிவகாசி கிரகம் கேப்ஸ் (பட்டாசு) தொழிற்சாலையில் 19-10-56 மாலை 5-20 மணிக்கு ஏற்பட்ட பெரும் வெடி விபத்தில் 6 இளைஞர்கள் ஸ்தலத்திலேயே கோரப் பலியாகி மாண்டனர். அவர் உடல்கள் உருத்தெரியாமல் சிதறி அழிந்தன. தாயம்மாள் என்ற பெண்ணுக்கு தொடையில் பலத்த காயம் ஏற்பட்டு, சிகிச்சை செய்யப்படுகிறது.

### விபத்துக்கு காரணம்

தீபாவளி கிராக்கியை முன்னிட்டு பட்டாசுகளை துரிதமாக உற்பத்தி செய்ய முதலாளியால் தூண்டப்பட்டனராம். டஜன் குரோஸ் பாக்கிங் செக்ஷனில் ஏற்கனவே இருந்த ஸ்டாக் மீது பட்டாஸ் பண்டல்களை அடுக்கிவைக்கும்போது ஏற்பட்ட உராய்வால் வெடிவிபத்து ஏற்பட்டிருக்கிறது.

மேலும், 4 பேர் வேலை செய்யக்கூடிய இடத்தில் மேற்படி எல்லோரையும் வைத்து வேலைவாங்கப்பட்டிருக்கிறது.

வெடி விபத்திற்கு பலியாகி உயிர் நீத்த தொழிலாளர்கள் கீழ்க்கண்டவர்கள் 1. காயாம்பு (வயது 17) சிவகாசி, 2. மு. ராமர் (வயது 14), 3. சக்திவேல் (வயது 14) 4. எஸ். கே. வெள்ளைச்சாமி (வயது 14), 5. பொன்னுச்சாமி (வயது 13) 6. வீரநாகு (வயது 14)—2லிருந்து 6 முடிய 5 பேரும் சித்திராஜபுரம் கிராமத்தைச் சேர்ந்தவர்கள்) 7. தாயம்மாள் (சிவகாசி) தொடையில் படுகாயம் ஏற்பட்டு சிகிச்சை பெற்று வருகிறார்.

விபத்தின் தகவல் தெரிந்து போலீஸ் அதிகாரிகள் ஸ்தலத்திற்குச் சென்று விசாரித்திருக்கின்றனர். தொழிலாளர்களுக்கு சட்டப்படியான பாதுகாப்புகள் கொடுக்கப்படவில்லை. உயிர் இழந்த இளைஞர்களின் குடும்பங்களுக்கு நஷ்டஈடு கிடைப்பதற்கோ, சிறுவர்களை சட்டவிரோதமாக வேலைசெய்ய அனுமதித்ததற்கோ எவ்வித நடவடிக்கையும் அதிகாரிகள் எடுத்ததாகத் தெரியவில்லை.

(தின மணி, தினத் தந்தி, தமிழ் நாடு போன்ற ஏடுகளில் உண்மையான செய்திகளை, உதாரணமாக, பாக்டரியின் பெயர், பலியானவர்களின் பெயர்கள், வயது, விபத்தின் உண்மைக் காரணம், வேலைக்கு துரிதப்படுத்தியது, சிறுவர்களை வேலை வாங்கியது, மற்றும் விஷயங்கள் மறைக்கப்பட்டு செய்தி வெளிவந்துள்ளது).

(ந. கி.)

## ஐக்கிய தமிழக தினத்தை சிறப்புறக் கொண்டாட

### வாசகசாலைகள் ஆலோசனைக் கூட்டம்

தூத்துக்குடி, அக். 20—

'ஐக்கிய தமிழகம்' உருவாகும் நவம்பர் முதல் நாளை சிறப்புறக் கொண்டாடுவதற்கான நகர வாசகசாலை பிரதிநிதிகளின் ஆலோசனைக் கூட்டம் 19ம் தேதி மாலை 6 மணிக்கு பாலன் படிப்பகத்தில் நடந்தது. நகர கம்யூனிஸ்ட் கட்சி, மாதர் சங்கம், புத்துணர்ச்சி நாடக சபா, அருணு வாசகசாலை, பாலன் படிப்பகம், ஐக்கிய முன்னணி வாசகசாலை வடக்கூர், ஐக்கிய முன்னேற்ற வாசகசாலை போல் நாயக்கர் பேட்டை, ஆதித்தன் படிப்பகம், முற்போக்கு ஐக்கிய சங்கம் ஆகியவற்றின் பிரதிநிதிகள் கூட்டத்திற்கு வந்திருந்தனர். கூட்டத்திற்கு நகரசபை உறுப்பினர் டி. கே. சுவாமிதாஸ் தலைமை வகித்தார். ஐக்கிய தமிழக தினத்தை சிறப்புறக் கொண்டாடுவதென்றும் அன்று ஒரு பெரும் ஊர்வலம் பொதுக் கூட்டமும் நடத்துவதென்றும் முடிவுசெய்யப்பட்டது. விழாவை சிறப்புற நடத்த டி. கே. சுவாமிதாஸ், எஸ். பரமசிவம், சங்கரன், சீனிவாசன், ஞானமுத்து ஆகியோரைக் கொண்ட கமிட்டி தேர்ந்தெடுக்கப்பட்டது. கமிட்டியின் கண்வீனராக எஸ். பரமசிவம் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

# காஞ்சீபுரம்பட்டுநெசவுகூட்டுறவு சொஸைடியின் வளர்ச்சி

## மந்திரி பாராட்டு

காஞ்சிபுரம், அக். 23—

கைத்தறித் தொழிலை பாதிக்கும் எவ்வித நடவடிக்கைக்கும் சென்னை சர்க்கார் உடன்படாது, என்று சென்னை சர்க்கார் விவசாய, தொழில் மந்திரி திரு. பக்தவத்சலம் நேற்று முன் தினம் இங்கு பட்டு கைத்தறி நெசவாளர் கூட்டுறவு சொஸைடியின் வருடாந்திர ஜெனரல்பாடிக் கூட்டத்தில் பேசுகையில் திட்டவட்டமாக வாக்குறுதி கொடுத்தார். கைத்தறித் தொழில் என்றும் வளர்ச்சியடைய வேண்டும் என்பதையே சர்க்கார் விரும்புவதாகவும் குறிப்பிட்டார்.

இந்தக் கூட்டுறவு சொஸைடி ஏற்பட்ட பின் கடந்த 19 மாத காலத்தில் இதுகல்ல முன்னேற்றம் அடைந்துள்ளது. நல்ல லாபம் சம்பாதித்துள்ளது. அதனுடைய ஒரு பகுதி நெசவாளர்களுக்கு போனஸாகக் கொடுக்கப்பட்டிருக்கிறது. மற்ற சொஸைடிகளுக்கு இது ஒரு முன்னுதாரணமாக விளங்குகிறது. கூட்டுறவு சொஸைடியாக இருப்பதினுலேயே இது சாத்தியமாயிற்று, என்று மந்திரி பாராட்டிப் பேசினார்.

எல்லா இடங்களிலும் கூட்டுறவு சொஸைடிகள் ஏற்பட வேண்டுமென்றும் திரு. பக்தவத்சலம் குறிப்பிட்டார்.

பட்டு நெசவுத் தொழிலை அபிவிருத்தி செய்ய சர்க்கார் எல்லா உதவியும் செய்யுமென்றார்.

இந்த கூட்டுறவு சொஸைடியில் மெம்பர்களாக உள்ள நெசவாளர்களுக்கு ஒரு ரூபாய்க்கு 3 அணு 8 தம்பிடி வீதம் போனஸ் வழங்கப்பட்டது.

கூட்டுறவு சொஸைடிக்கு கடந்த வருஷத்தில் ரூ 20,765-4-0 லாபம் கிடைத்திருப்பதாக, சொஸைடி தலைவர் திரு. எஸ். எல்லப்ப முதலியார் தெரிவித்தார்.

சொஸைடியின் உப தலைவர் தோழர் கே. எஸ். பார்த்தசாரதி பேசுகையில் இந்திய சர்க்காரின் புதிய ஜவுளிக் கொள்கையும், விசைத்தறிகளும் கைத்தறிகளின் நாசத்தை ஏற்படுத்தும் என்றார்.

## தியாகி ஆறுமுகம் ஞாபகார்த்த வாசகசாலை உதயம்

தூத்துக்குடி, அக். 20—

இந்நகரை அடுத்த சவேரியார் புரம் கிராம ஐக்கிய முன்னணி வாசகசாலையின் அங்கத்தினர்கள் கூட்டம் 14-ம் தேதி வி. மிக்கேல் திரவியம் தலைமையில் நடந்தது. அதுசமயம் கீழ்க்கண்ட தீர்மானங்கள் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டது.

சிறந்த பொதுஜன ஊழியரும், கிராம முன்சிப்பாக இருந்து கிராம மக்களுக்குப் பெரும் தொண்டாற்றியவருமான, கிராம முன்சிப் தோழர் எஸ். ஆறுமுகம் கொலை செய்யப்பட்டார். அவருக்கும், அன்னார் குடும்பத்தாருக்கும் ஆழ்ந்த அனுதாபத்தை தெரிவிக்கிறது.

### வாசகசாலை உதயம்

தோழர் ஆறுமுகம் கிராம மக்களுக்கு சிறந்த சேவை செய்து வந்ததோடு "கிராம ஐக்கிய முன்னணி வாசகசாலை" உருவாக பெரிதும் பாடுபட்டவர். எனவே வாசகசாலையின் பெயரை மாற்றி "ஆறுமுகம் ஞாபகார்த்த வாசகசாலை" என்ற பெயர் வைப்பது எனவும் கூட்டத்தில் ஏகமனதாக தீர்மானம் நிறைவேறியது.

## பொன்மலை பஞ்சாயத்து அவசரக் கூட்டம்

பொன்மலை, அக். 22—

பொன்மலை பஞ்சாயத்தின் அவசரக் கூட்டம் சென்ற 15ம் தேதி தலைவர் திரு. ஆர். ராஜமணி தலைமையில் நடைபெற்றது. பஞ்சாயத்து மார்க்கட்டுக்கான நிலத்தை துரிதமாக பஞ்சாயத்துக்கு மாற்றிக் கொடுக்கும்படி சர்க்காரைக் கேட்டுக்கொண்டும், சங்கிலியாண்டிபுரம் பொன்மலைப் பட்டி ஆகிய இடங்களிலிருந்து மெயின் கேட், புத்தூர் சாக்கார் ஆஸ்பத்திரி முதலிய இடங்களுக்கு பஸ் விடும்படி கோரியும் தீர்மானங்கள் நிறைவேறின. பின்னர் நடைபெற்ற சாதாரணக் கூட்டத்தில் 12 விஷயங்கள் பைசல் செய்யப்பட்டன.

## நாகை தாலுகா கம்யூனிஸ்டு அங்கத்தினர் மகாசபைக் கூட்டம்

விஜயபுரம், அக். 22—

நாகப்பட்டணம் தாலுகா கம்யூனிஸ்ட் கட்சி அங்கத்தினர்களின் மகாசபைக் கூட்டம் அக்டோபர் 19ந் தேதியன்று தோழர் வைத்திலிங்கம் தலைமையில் சிக்கலில் நடைபெற்றது.

கம்யூனிஸ்ட் கட்சி தமிழ்நாடு மாகாணக் கமிட்டி உறுப்பினர் தோழர் மணலி கந்தசாமி "தேர்தலும் கம்யூனிஸ்ட் கட்சியும்' என்பது பற்றி விளக்க உரை நிகழ்த்தினார்.

கூட்டத்தின் ஆரம்பத்தில், தமிழ்நாட்டுக்கு தமிழ்நாடு என்றே பெயரிட வேண்டுமென்று வற்புறுத்தி 77 நாள் உண்ணுவிரதமிருந்து உயிர்நீத்த தியாகி சங்கரலிங்கனார் மறைவுக்கு ஆழ்ந்த அனுதாபம் தெரிவிக்கும் முகத்தான் அனைவரும் எழுந்து நின்று 2 நிமிஷ மௌனம் அனுஷ்டித்தனர்.

# 15000 பட்டு நெசவாளர்கள் வேலைநிறுத்தம்

கும்பகோணம், அக். 22—

கும்பகோணம், தாராசுரம், அம்மாப்பேட்டை, அய்யம்பேட்டை, சுவாமிமலை, சோழன் மாளிகை, பட்டீஸ்வரம், திருபுவனம், அம்மாசத்திரம், கும்பகோணம் சாயத் தொழிலாளிகளையும் உள்ளிட்ட 15000 நெசவுத் தொழிலாளர்கள் 21-10-56-ந் தேதி காலை முதல் வேலை நிறுத்தம் செய்து வருகின்றனர். வேலை நிறுத்தம் வெற்றிகரமாகவும் அமைதியாகவும் நடைபெறுகிறது.

கும்பகோணம் தொழிலாளர்கள் தாங்களாகவே தங்கள் தறிகளில் உள்ள மிதிக் கட்டைகளை எடுத்துவந்து பொதுவான ஒரு இடத்தில் போட்டு வைத்திருக்கின்றனர். தாராசுரம் தொழிலாளர்கள் மிதிக்கட்டைகளைவிட மிக அவசியமான தறிச் சட்டத்தையே தாங்களாகவே ஒரு பொது இடத்தில் போட்டு வைத்திருக்கின்றனர். இதை போன்றே எல்லா ஊர்களிலும் நடந்துவருவதாக ஜில்லா சங்கத்தின் காரியதரிசி அறிவிக்கிறார். வேலை நிறுத்தம் தொடர்ந்து நடைபெறுகிறது. வேலை நிறுத்தம் சம்பந்தமாக ஜில்லா கலெக்டர், ஜில்லா போலீஸ் சூப்பிரண்டு, லேபர் ஆபிஸர் இவர்கள் சமரச முயற்சியில் ஈடுபட்டுள்ளனர். (ந. கி)

## சட்டப்படி அறுவடை செய்த விவசாயிகள் கைது!

திருச்சி, அக். 23—

திருச்சி தாலுகா அந்தநல்லூர் கிராமத்தில் நில வெளியேற்ற தடைச் சட்டப்படி ரிவினியூ கோர்ட் உத்திரவின்மீது உழுது சாகுபடி செய்த நிலத்தில் குறுவைக் கதிர் அறுவடை செய்த விவசாயிகள் முனியாண்டி, வையாபுரி, அண்ணுவி, வீரமலை வேம்படியான் ஆகிய ஐந்துபேரை ஜீயபுரம் போலீசார் நேற்று கைது செய்திருக்கிறார்கள். (ந. கி.)

## விருதுநகரில் சர்வகட்சிக் கூட்டம்

விருதுநகர், அக். 22—

சங்கரலிங்கனார் மறைவுக்கு அனுதாபம் தெரிவிக்கும் வகையில் நேற்று விருதுநகரில் பரிபேக் மாரியப்பா (கம்) தலைமையில் சர்வகட்சிக் கூட்டம் நடைபெற்றது. திருவாளர்கள் ரத்தினம், அரங்கநாதன் (தி.மு.க.) சுந்தரத்தேவர் (பி. சோ.) வித்தியா சேகரன், துரைராஜ், (தமிரசு கழகம்), சி. வீராசாமி, (கம்) மற்றும் பலரும் பேசினர்.

## தோட்டத் தொழிலாளர் சங்கம்

ஸிரிமலை, அக். 22—

சென்டினல் ரோக் எஸ்டேட் தோட்டத் தொழிலாளர் சங்க மகாசபைக் கூட்டம் திரு. டி. மத்தேயு மேஸ்திரி தலைமையில் நடைபெற்றது. தற்காலிகத் தொழிலாளர்களை நிரந்தரமாக்கும்படி சூப்பிரண்டிடம் எடுத்துக்கூற மத்தேயு மேஸ்திரி, இப்ராஹிம் மேஸ்திரி ஆகிய இருவரையும் அனுப்புவதென்று முடிவு செய்யப்பட்டது. அரசியல் கைதிகளை விடுதலை செய்யும்படி கோரியும், தியாகி சங்கரலிங்கனாரின் மரணத்துக்கு அனுதாபம் தெரிவித்தும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

## கிராம அபிவிருத்தி சங்கக் கூட்டம்

பெரியசடையம்பாளையம், அக். 22—

சின்ன சடையம்பாளையம், பெரிய சடையம்பாளையம் கிராம அபிவிருத்தி சங்கத்தின் மகாசபை கூட்டம் கடந்த 16-ந்தேதி இரவு 9-30 மணிக்கு இங்கு மாரியம்மன் கோயில் முன்பு திரு. எஸ். வி. சின்னப்ப கவுண்டர் தலைமையில் நடைபெற்றது.

சங்கக் காரியதரிசி எஸ். கே. வாரணவாசி, ஆர். சி. பழனியப்பன், கே. டி. ராஜு (எம். எல். ஏ.) ஆகியோர் கிராம மக்களின் பிரச்னைகளைப் பற்றிப் பேசினர். கிராம மக்களின் ஒற்றுமையை வற்புறுத்தினர். (ந. கி)

## மாஸ்கோ பள்ளியில் இந்திய மொழிகள்

மாஸ்கோ, அக். 22—

இந்திய (ஹிந்தி, உருது), சீன மொழிகளைக் கற்பிக்கும் உயர்நிலைப் பள்ளி ஒன்று மாஸ்கோவில் ஆரம்பிக்கப்பட்டுள்ளது. கீழ்த்திசை மொழிகள் பள்ளி எனப்படும் இப்பள்ளிக் கூடத்தில், இவ்வாண்டில் 180 மாணவர்கள் சேர்க்கப்பட்டுள்ளனர். கூடிய சீக்கிரத்தில் இங்கு 350 மாணவர்கள் வரை சேர்க்கப்படுவர். —டாஸ்.

## காஞ்சியில் கூட்டம்

காஞ்சிபுரம், அக். 22—

சர்வகட்சிகளின் சார்பில் தோழர் கே. எஸ். பார்த்தசாரதி தலைமையில் நேற்று சங்கரலிங்கனார் மறைவு அனுதாபக் கூட்டம் நடைபெற்றது. கம்யூனிஸ்ட் கட்சி, சோஷலிஸ்ட் கட்சி, தமிழரசுக் கழகம், பார்வர்ட் பிளாக் ஆகிய கட்சிகளின் சார்பாக தோழர்கள் பேசினார்கள். மாலை 3 மணிக்கு ஊர்வலம் நடைபெற்றது. சங்கரலிங்கனார் குடும்பத்துக்கு ரூ 40 நன்கொடையாக அனுப்புவதென்று தீர்மானிக்கப்பட்டது.

# அரசியல் கைதிகள் விடுதலை தினம்

## நாடெங்கும் பொதுக்கூட்டங்கள்

சென்னை, அக். 23—

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் தமிழ் மாகாணக் கமிட்டியின் அறைகூவலை ஒட்டி அக். 21-ந் தேதியன்று அரசியல் கைதிகள் தினம் பலவிடங்களில் அனுஷ்டிக்கப்பட்டது. பொதுக்கூட்டங்கள் ஊர்வலங்கள் நடைபெற்றன. தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. தந்திகள் அனுப்பப் பெற்றன.

### புதுவை

புதுவை, அக். 23—

புதுவை முத்தியாலுப்பேட்டையில் நடைபெற்ற கம்யூனிஸ்ட் கட்சிக் கூட்டத்தில் நவம்பர் முதல் நாள் சகல அரசியல் கைதிகளையும் விடுதலை செய்ய வேண்டும் என்று கோரும் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. தோழர் வி. சுப்பையா செங்கொடி ஏற்றுவித்தார். தோழர்கள் கிளமன்ஸோ, வி.ச. தலைவர் கோவிந்தராஜ நாயக்கர், திருமதி சரஸ்வதி சுப்பையா முதலியோர் பேசினர்.

### சிவகாசி

சிவகாசி, அக். 23—

இங்கு சைக்கிள் ஊர்வலம் நடந்தது. இரவு 7 மணிக்கு எஸ். அருணாசலம் தலைமையில் நடைபெற்ற பொதுக்கூட்டத்தில் தொண்டர் துரைசாமி, கே. சின்னமணி, ஆர். எஸ். குருசாமி, முத்து ராமானுஜம், (பார்வேட் பிளாக்) முதலியோர் பேசினர்கள். தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

### பெரியகுளம்

பெரியகுளம், அக். 23—

கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் தோழர் என். ஏ. ரஜாக் தலைமையில் நடைபெற்ற கூட்டத்தில் தோழர்கள் எஸ். பி. தேவர், பி. அப்துல்ரகுமான், எஸ். எம். பொன்னையா ஆகியோர் பேசினர்கள்.

### திண்டுக்கல்

திண்டுக்கல், அக். 23—

திண்டுக்கல் பாரதி திடலில் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் நடைபெற்ற கூட்டத்தில் தோழர்கள் ஏ. பாலசுப்ரமண்யம், என். வரதராஜன் முதலியோர் பேசினர்கள்.

### கரூர்

கரூர், அக். 23—

இங்கு ஊர்வலமும் பொதுக்கூட்டமும் நடைபெற்றன. தோழர் சோனியப்பன் தலைமையில், குட்டப்பன் சுப்ரமண்யம் ஆறுமுகம் ஆகியோர் பேசினர்கள்.

வேலூர் சர்வகட்சிக் கூட்டம், திருச்சி ஜில்லா சுருட்டு புகையிலைத் தொழிலாளர் சங்க மகாசபை, உடுமலை ஐக்கிய பீடித் தொழிலாளர் சங்க மகாசபை, விருதுநகர் முற்போக்கு வாலிபர் சங்க வாசக சாலை இவற்றின் சார்பிலும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

தியாகி சங்கரலிங்கனுருக்கு அஞ்சலி செலுத்த 21ந் தேதி சென்னைக் கடற்கரையில் 50,000 பேர் திரண்ட சர்வ கட்சிக் கூட்டத்தின் ஒரு பகுதி.

# ஆந்திர காங்கிரஸ் தலைவர் தேர்தலில் வோட்டுக்கு 25 ஆயிரம்

## சஞ்சீவி ரெட்டி தலைவரான லட்சணம்

கர்னூல், அக். 21—

ஆந்திர பிரதேஷ் காங்கிரஸ் சட்டசபைத் தலைவர் பதவிக்கு சஞ்சீவி ரெட்டி ஏகமனதாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார் என்று அறிவிக்கப்பட்டுள்ள தல்லவா? இந்த 'ஏகமனதானத் தேர்தலு'க்குப் பின்னல் திரை மறைவில் நடைபெற்ற பல விஷயங்கள் தற்போது அம்பலமாகியுள்ளன.

### பின்னணியில் பணமூட்டைகள்

ஆந்திராவிலுள்ள பெரும் பணமூட்டைகளிலே பலர் சஞ்சீவி ரெட்டியை ஆதரித்ததாகவும், அதே போன்று வேறு பல செல்வந்தர்கள் கோபால் ரெட்டியை ஆதரித்ததாகவும் தெரிகிறது. இந்தப் போட்டியில் தங்கள் தங்கள் அபேட்சகர் வெற்றிபெற வேண்டுமென்பதற்காக இந்தப் பணமூட்டைகள் பணத்தைத் தண்ணீராக வாரிஇறைத்தார்களாம். கோபால் ரெட்டி கோஷ்டியினர் ஒரு வோட்டுக்கு 15 ஆயிரம் ரூபாய் என்று பேரம் பேசினுல், சஞ்சீவி ரெட்டி கோஷ்டியினர் இதற்கு சளைக்காமல் வோட்டுக்கு 25 ஆயிரம் ரூபாய் தர முன் வந்தார்களாம்!

இதன்றி, வோட்டு சேகரிப்பதற்காக ஆயிரக்கணக்கான ரூபாய்கள் செலவழித்து ஆங்காங்கு பெரிய பெரிய விருந்துகள் நடத்தினுர்களாம்.

## கனரகத் தொழிலை வளர்க்காமல்வறுமையைப் போக்க முடியாது

### மந்திரி எம். எம். ஷா கருத்து

பாட்னு, அக். 23—

கனரகத் தொழில்களை வளர்க்காமல் இந்தியாவில் வறுமையைப் போக்க முடியாது என்று நேற்று முன் தினம் இங்கு பாரத் சேவக சமாஜக் கூட்டமொன்றில் பேசும் பொழுது மத்ய மந்திரி திரு. ஷா கூறினர். பிரதானத் தொழில்களை எல்லாம் சர்க்கார் தேசியமாக்கும் என்னுர். கனரகத் தொழில்களே சிறு தொழில்களுக்குத் தாய் எனவும் இதன் அபிவிருத்திக்காக இரண்டாவது திட்டத்தில் ரூ. 1100 கோடி செலவழிப்பது சிறு தொழில்களுக்கு ஆக்கம் தரும் என்றும் குறிப்பிட்டார்.

## துறைமுகத் தொழிலாளருக்கு சம்பள நிர்ணய போர்ட்

பம்பாய், அக். 23—

இந்தியாவிலுள்ள பிரதான துறைமுகங்களில் வேலை செய்து வரும் தொழிலாளர்களுக்கு சர்க்கார் ஒரு சம்பள போர்டை நியமிக்க வேண்டும் என்று பம்பாயில் நடைபெற்றுவரும் அகில இந்திய போர்ட் அண்ட் டாக் தொழிலாளர் சம்மேளனம் கோரிக்கை வைத்திருப்பதாகத் தெரிய வருகிறது.

இந்தக் கோரிக்கைக்கு சர்க்கார் அளிக்கும் பதிலைப்பற்றி விவாதிக்க இந்த சம்மேளனத்தின் விசேஷக் கூட்டம் அக்டோபர் 29-ந்தேதி கல்கத்தாவில் நடைபெறும்.

## இன ஒதுக்கல் வெறியை எதிர்த்து தென்னுப்பிரிக்க இந்தியர் எழுச்சி

ஜோஹனஸ்பர்க், அக். 23—

இன ஒதுக்கல் சட்டத்தையும் அதன் சகல அம்சங்களையும் கடுமையாக எதிர்க்கிறேம், முற்றிலும் நிராகரிக்கிறேம் என்ற தீர்மானம் தென்னுப்பிரிக்க இந்தியர் காங்கிரஸ் மகாநாட்டில் நிறைவேற்றப்பட்டது.

வெள்ளையர் வாழும் பிரதேசங்களிலிருந்து வேறு நிறத்தவர்களை ஒதுக்கி வெளியேற்ற எடுக்கப்படும் நடவடிக்கைகளுக்குத் தலை வணங்கக் கூடாது, வெளியேற மறுக்க வேண்டும் எனவும் வலியுறுத்தப்பட்டது.

தமது உழைப்பினுல், வியர்வையால் வளர்க்கப்பட்ட வாழ்க்கை நிலை, வீடு வாசல்கள், வர்த்தகம், கல்வி கலாசார சமய அமைப்புகள் இவற்றை விட்டு ஓட முடியாது என்று மகாநாடு குறிப்பிட்டது. இந்த இன ஒதுக்கல் சட்டம் பெரும்பாலான மக்கள் மீது சிறு கும்பல் ஆதிக்கத்தை திணிப்பது எனவும் அத்தீர்மானம் குறிப்பிட்டது.

விரைவில் பல்வேறு இனங்களையும் சேர்ந்த மக்களின் பிரதிநிதிகளைக் கொண்ட ஓர் ஐக்கிய முன்னணி மகாநாட்டைநடத்துவதெனவும் முடிவு செய்யப்பட்டது.

# புதுவை ரோடியர் மில்லில் உள்ளிருப்பு ஸ்ட்ரைக் நீடிக்கிறது

புதுவை, அக். 22—

8-ந் தேதி முதல் நடக்கும் ரோடியர் மில் உள்ளிருப்பு வேலைநிறுத்தம் தொடர்ந்து நீடிக்கிறது. தொழிலாளர்களை வெளியேற்றிவிட்டு, இயந்திரத்திற்கு 'கிரீஸ்' போட்டுவிட்டு, ஆலையை மூடிவிட நிர்வாகம் முற்பட்டதால் சிறு சச்சரவு ஏற்பட்டது. அரசாங்கத்தின் தொழிலாளர் ஆலோசனைக் கமிஷன் 4 தறி முறையைப் புகுத்தாமல் வேலையை நடத்தும்படி நிர்வாகத்திற்குத் தெரிவித்தது. அதை முதலாளி மதிக்கவில்லை. ஆகவே தொழிலாளர் சங்கம் மத்திய அரசாங்கத்திற்கு இன்று தந்தி மூலம் ஆலையைத் திறந்து நடத்த உத்திரவிடும் அவசரச் சட்டம் பிறப்பிக்க புதுவை அரசாங்கத்திற்கு அதிகாரமளிக்கவேண்டுமெனக் கேட்டுக்கொண்டுள்ளது.

## திட்டக்கமிஷன் தாக்கீது! 1957-58-ம் வருடத்தில் அமுலாக்கப்படும் திட்டங்கள் என்ன?

புதுடில்லி, அக். 23—

இரண்டாவது ஐந்தாண்டுத்திட்டத்தில் 1957-58-ம வருடத்திற்கு ஒவ்வொரு ராஜ்யத்திலும் என்னென்ன திட்டங்களை மேற்கொள்ளப் போகிறுர்கள என்ற தகவலைத் தனக்கு அனுப்பிவைக்கும்படி திட்டக் கமிஷன் ஒவ்வொரு ராஜ்ய சர்க்காருக்கும் தாக்கீது அனுப்பியுள்ளது.

இதேபோல் மத்திய சர்க்கார் 1957-59 வருஷத்தில் என்னென்ன திட்டங்களை அமுலாக்கப் போகிறது என்பதையும் தெரிவிக்கும்படி திட்டக் கமிஷன் கேட்டுள்ளது.

# சங்கரலிங்கனுர் மறைவுக்கு அனுதாபம்

## பொதுக் கூட்டங்கள் ஊர்வலங்கள்

ஒட்டன்சத்திரம், அக். 22—

தியாகி சங்கரலிங்கனுர் மறைவுக்கு அனுதாபம் தெரிவித்து, தோழர் நாட்ராயன் தலைமையில் சென்ற 16-ந் தேதி நடைபெற்ற ஒட்டன் சத்திரம் வர்த்தகத்தொழிலாளர் சங்க நிர்வாகக் குழுக் கூட்டத்தில் ஒரு தீர்மானம் நிறைவேறிற்று.

### அமரருக்கு அஞ்சலி

கரூர், அக். 21—

இவ்வூர் கம்யூனிஸ்ட், சோஷலிஸ்ட், காங்கிரஸ், தி. மு. கழகம், கரூர் தாலுகா கைத்தறித் தொழிலாளர் சங்கம், மில் லேபர் யூனியன், கரூர் மில்மென் யூனியன், நெசவுத் தொழிலாளர் சங்கம், நகரசுத்தித் தொழிலாளர் சங்கம், வர்த்தகத் தொழிலாளர் சங்கம் ஆகியவை சார்பில் அக்டோபர் 19-ந் தேதி மாலை மழையையும் பொருட்படுத்தாது மௌன ஊர்வலம் நடைபெற்றது.

பின்னர் கஸ்தூரிபாய் பிரசவ ஆஸ்பத்திரி மைதானத்தில் நடைபெற்ற கூட்டத்தில் தியாகி சங்கரலிங்கனுர் மறைவுக்கு அனுதாபம் தெரிவிக்கும் தீர்மானமொன்று நிறைவேற்றப்பட்டது.

(ந. நி.)

### ஆனைமலையில் 2000 பேர் ஊர்வலம்

ஆனைமலை, அக். 23—

தியாகி சங்கரலிங்கனுர் மரணத்துக்கு அஞ்சலி செலுத்தவும், அரசியல் கைதிகளை விடுதலை செய்யும்படி வற்புறுத்தவும் சென்ற 21-ம் தேதி ஆனைமலை தோட்டத் தொழிலாளர் சங்கம் சார்பில் 2000 பேர்கள் கொண்ட ஒரு பிரம்மாண்டமான ஊர்வலமும் 4000 பேர்கள் கொண்ட ஒரு பொதுக்கூட்டமும் நடைபெற்றது.

கவந்தப்பாடியில் அக்டோபர் 21-ம் தேதி சர்வ கட்சியினரும் சைக்கிள் ஊர்வலம் நடத்தி சங்கரலிங்கனுருக்கு அஞ்சலி தெரிவித்துக் கொண்டனர்.

# மார்க்கெட் நிலவரம்

### தங்கம், வெள்ளி

சென்னை, அக். 24—

| | |
|---|---|
| சவரன் | 67-8-0 |
| தங்கம் ரெடி | 104-9-0 |
| மூசை தங்கம் | 103-0-0 |
| வெள்ளி 100 தோலா எடை | 173-8-0 |
| வெள்ளி 1 ரூபாய் எடை | 1-12-6 |

### மணிலாப்பயறு

| | |
|---|---|
| 531 ரா. கொண்ட பாரம் 1-க்கு விற்பனைவரி உள்பட புதிய சரக்கு உயர்ந்த ரகம் | 160-0-0 |
| சாதா | 156 |

### மணிலா எண்ணெய்

| | |
|---|---|
| 500 ரா. கொண்ட பாரம் 1-க்கு எக்ஸ்பெல்லர் ரெடி (மதராஸ்) கிடங்கு டெலிவரி 3% F. F. A. (மொத்த விலை ரெடி) | 306 0-0 |
| அக்டோபர் | 300-0-0 |

### விளக்கெண்ணெய்

500 ரா. கொண்ட பாரம் 1-க்கு (மதராஸ் கிடங்கு டெலிவரி)

| | |
|---|---|
| திருப்பத்தூர் | 315-0-0 |
| சேலம் "தாமரை" "அன்னம்" (37½ ரா. டின் உள்பட) | 24-0-9 |

### தேங்காய் எண்ணெய்

37½ ரா. கொண்ட டின் 1-க்கு (விற்பனை வரி தனி)

| | |
|---|---|
| கொல்லம் சரக்கு எம். எல். மார்க் | 27-8 9 |
| ராஜா மார்க்கு | 26-12-9 |
| அப்பு மார்க்கு | 26-12-9 |

### சர்க்கரை

| | |
|---|---|
| எக்ஸைஸ்வரி விற்பனை வரி உள்பட) பிரிட்டிஷ் சுத்தம் செய்யப்பட்ட சர்க்கரை (2 அந்தர்) | 90-9-9 |
| சாமல் கோட்டை (2 அந்தர்) | 93-0-9 |
| கிர்லாம்புடி (227 ரா) | 94-0-9 |



Regd. No.M. 5934 Printed & Published by S. KRISHNASWAMY, at Janasakthi Press. (Phone 2241) 32, Broadway, Madras-1. Editor : P. JEEVANANDAM

REGISTERED AS A NEWS PAPER IN CEYLON